

**ஜி.ஏ. கௌதம்**
திரைப்பட எடிட்டர்




# அரசியலில் தன்னை மூழ்கடித்துக்கொண்ட திரைக்கலைஞன்

புகழ்பெற்ற இந்தியத் திரைப்பட இயக்குனரான மிருணாள் சென், திரைப்பட உலகிற்கு தனது தனித்துவமான பங்களிப்புகளுக்காகக் கொண்டாடப்படுகிறார். இருப்பினும், அவரது குறிப்பிடத்தக்க இயக்குநர் வாழ்க்கையைத் தாண்டி, சென் இந்திய அரசியலிலும் குறிப்பிடத்தக்க பங்கைக் கொண்டிருந்தார்.

மே 14, 1923 அன்று வங்காள மாகாணத்தின் (இப்போதுள்ள பங்களாதேஷ்) ஃபரித்பூரில் பிறந்த மிருணாள் சென், தன் ஆரம்பகாலத்திலேயே திரைப்படங்கள்மீது ஆர்வத்தை வளர்த்துக் கொண்டார். தனது கல்வியை முடித்தபிறகு, 1950களில் திரைப்படங்கள் மீதான தனது பயணத்தைத் தொடங்கினார். அவரது திரைப்படங்கள் பெரும்பாலும் இந்திய சமூகத்தைப் பாதிக்கும் சமூக அரசியல் பிரச்சினைகளை வெளிச்சம் போட்டுக் காட்டும் கலை மற்றும் சிந்தனையைத் தூண்டும் கதைகளுக்கு பெயர் பெற்றவை. அவரது படைப்புகள் யதார்த்தவாதத்தை ஒரு தனித்துவமான சினிமா பாணியுடன் இணைத்து, அவரை இந்திய சினிமா இயக்கத்தின் முன்னோடிகளில் ஒருவராக ஆக்கின.

சமூக ஏற்றத்தாழ்வுகளை மிருணாள் சென் உன்னிப்பாகக் கவனித்ததும், சமூக மாற்றத்திற்கான அவரது விருப்பமும் அவரை அரசியல் சித்தாந்தங்களுடன் ஈடுபட வழிவகுத்தது. கொந்தளிப்பான 1970ஆம் ஆண்டுகளில், இந்தியா அரசியல் மற்றும் சமூக அமைதியின்மையில் சிக்கித் தவித்தபோது, மிருணாள் சென் இடதுசாரி சித்தாந்தங்களால் ஈர்க்கப்பட்டு, இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) அல்லது சிபிஐ (எம்) உடன் தீவிரமாகத் தன்னை இணைத்துக் கொண்டார்.

முதலில், வெளிப்படையான அரசியல் சார்ந்த படங்களை எடுத்ததில் அவரது ‘கல்கத்தா ட்ரைலாஜி’ மற்றும் ‘கோரஸ்’ ஆகியவை முன்னோடி முயற்சிகளாகும். பிரபல விமர்சகர் ‘டெரிக் மால்கம்’, “மிகப்பெரிய முரண்பாடுகளுக்கு மத்தியில், இந்தியாவின் சமூக மற்றும் அரசியல் கொந்தளிப்பை வேறு எந்த சமகால இந்திய இயக்குநரையும்விட அதிக நெகிழ்வுத்தன்மையுடனும் தைரியத்துடனும் மிருணாள் சென் கண்டறிந்துள்ளார். ஒரு உண்மையான வரலாற்றாசிரியராக, அவர் ஒரு சிறப்பு இடத்திற்கு தகுதியானவர்” என்று குறிப்பிட்டுள்ளார்.

சமூக மாற்றத்திற்கான ஒரு சக்திவாய்ந்த கருவியாக சினிமா இருக்க முடியும் என்று மிருணாள் சென் உறுதியாக நம்பினார். அதனாலேயே வர்க்கப் போராட்டம், சமத்துவமின்மை, வறுமை மற்றும் ஊழல் போன்ற பிரச்சினைகளைப் பேசும் அவரது திரைப்படங்கள் அரசியல் நம்பிக்கைகளைப் பிரதிபலித்தன. மிருணாள் சென்னின் அரசியல் சார்புடைய திரைப்படங்களான ‘புவன் ஷோம்’ (1969), ‘கல்கத்தா 71’ (1972) மற்றும் ‘ஏக் தின் பிரதிதின்’ (1979) ஆகியவை எதிரொலித்தன; சமூகத்தின் விளிம்புநிலை பிரிவினர் எதிர்கொள்ளும் போராட்டங்களை பார்வையாளர்களிடையே கொண்டு சேர்த்தன.





கொல்கத்தா நகர வாழ்க்கையின் பல்வேறு அம்சங்களை ஆராயும் *‘கல்கத்தா 71’ (1972)* நகரத்தின் சமூக-அரசியல் யதார்த்தங்களை திறமையாக ஆராய்வதுடன், வறுமை, ஊழல் மற்றும் நகர்ப்புற ஏழைகளின் போராட்டங்கள் போன்ற கருப்பொருள்களை சித்தரிக்கிறது; 1970களின் கொல்கத்தாவின் கொந்தளிப்பான சமூக மற்றும் அரசியல் சூழலை பதிவு செய்கிறது.

இரண்டு தசாப்தங்களுக்கு முன்பு நக்சலைட் இயக்கங்கள் உச்சத்தில் இருந்த சமயம், காவல்துறையினரால் சுட்டுக் கொல்லப்பட்ட மகனுக்காக ஒரு தாய் மேற்கொள்ளும் தற்கொலைக் காட்சியுடன் *‘மகாபிரிதிவி’ (1991)* தொடங்குகிறது. ஒவ்வொரு நாட்டிலும் கம்யூனிசம் சிதைந்து வரும் நிலையில், அவரது மகனின் தியாகம் பயனற்றதாகக் கருதப்பட்டு, வரலாற்றின் குப்பைக் குவியலில் எறியப்படுமா? என்ற சங்கடமான கேள்விகளை மிருணாள் சென்னின் பெரும்பாலான படங்கள் எழுப்புகின்றன.

வேலையில்லாத் திண்டாட்டப் பிரச்சினையைப் பேசும் *‘காரிஜ்’ (1982)*, சமூக- பொருளாதார சவால்களால் பாதிக்கப்பட்ட ஒரு சமூகத்தில் உயிர் வாழ முயற்சிக்கும் மூன்று படித்த இளைஞர்களின் போராட்டங்களை சித்தரிக்கிறது.

சாதிப் பாகுபாடு, சுரண்டல், கண்ணியத்துக்கான போராட்டம் போன்ற பிரச்சினைகளை *‘மிருகயா’ (1976)* வெளிச்சம் போட்டுக் காட்டுகிறது. இது சிறந்த திரைப்படத்திற்கான தேசிய விருதை வென்றது. இது சமூக வர்ணனையை ஈர்க்கக்கூடிய கதைசொல்லலுடன் இணைக்கும் மிருணாள் சென்னின் திறனைக் காட்டியது.





அவரது திரைப்படங்களைத் தாண்டி, அரசியல் ஈடுபாடு, கலை வெளிப்பாட்டு எல்லைக்கு அப்பால் விரிவடைந்தது. முக்கியப்

பிரச்சினைகள் குறித்த விழிப்புணர்வை ஏற்படுத்த தனது தளத்தையும் செல்வாக்கையும் பயன்படுத்தி அரசியல் பிரச்சாரங்களில் தீவிரமாகப் பங்கேற்றார். மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியுடனான சென்னின் தொடர்பு அவரை அரசியல் பேரணிகள், பொது விவாதங்கள் மற்றும் சமூக இயக்கங்களில் ஈடுபட வழிவகுத்தது.

1980களின் முற்பகுதியில், மேற்கு வங்கத்தில் சிபிஐ(எம்) தலைமையிலான இடது முன்னணி கூட்டணி ஆட்சிக்கு வந்தபோது, மிருணாள் சென்னின் செல்வாக்கு மேலும் விரிவடைந்தது. மாநிலத்தின் கலாச்சார மற்றும்



அறிவுசார் வட்டங்களில் ஒரு முக்கிய நபராக மாறினார். மேலும், கலாச்சாரக் கொள்கைகளை வடிவமைப்பதில் முக்கியப் பங்கு வகித்தார். கலை, இலக்கியம் மற்றும் சினிமாவை ஊக்குவிப்பதிலும் ஆதரிப்பதிலும் மிருணாள் சென்னின் முயற்சிகள் முற்போக்கான மற்றும் அனைவரையும் உள்ளடக்கிய சமூகம் குறித்த அவரது பார்வையுடன் இணைந்தன.

திரைப்படம் மற்றும் அரசியல் இரண்டிலும் மிருணாள் சென்னின் பங்களிப்பு இந்திய சமூகத்தில் அழிக்கமுடியாத முத்திரையைப் பதித்தது. மிருணாள் சென்னின்



மிருணாள் சென் 100

தனித்துவமான கதை சொல்லும் பாணி மற்றும் சமூகப் பிரச்சினைகளை முன்னிலைப்படுத்துவதில் அவரது தளராத அர்ப்பணிப்பு ஆகியவை இந்தியாவின் மிகவும் செல்வாக்குமிக்க திரைப்படத் தயாரிப்பாளர்களில் ஒருவராக அவரது இடத்தை உறுதிப்படுத்தின.

சென்னின் அரசியல் தொடர்புகள் கலவையான பாராட்டுகளையும் விமர்சனங்களையும் பெற்றாலும், சமூகநீதி மற்றும் அடித்தட்டு மக்களின் மேம்பாட்டிற்கான அவரது அசைக்கமுடியாத அர்ப்பணிப்பு மறுக்க முடியாததாகவே உள்ளது. மிருணாள் சென் தனது கலை மற்றும் அரசியல் செயல்பாட்டின் மூலம் சமூக விதிமுறைகளுக்கு சவால் விடுத்தார். மேலும் இந்தியாவின் சமூக அரசியல் நிலப்பரப்பை தொடர்ந்து வடிவமைக்கும் உரையாடல்களைத் தூண்டினார்.

கலையும் அரசியலும் பரஸ்பரம் பிரத்தியேகமானவை அல்ல என்பதை புகழ்பெற்ற மிருணாள் சென் தனது திரைப்படங்களின் வழியே நிரூபித்தார். அவரது திரைப்படங்கள் அவற்றின் சக்திவாய்ந்த கதையாடல்கள் மற்றும் அழுத்தமான சமூக வர்ணனைகளுடன், மாற்றத்திற்கான தூண்டுதல்களாக செயல்பட்டன. அரசியலில் மிருணாள் சென்னின் ஈடுபாடு வெள்ளித்திரையின் எல்லைகளைத் தாண்டி அவரது தாக்கத்தை விரிவுபடுத்த அனுமதித்தது. இது அவரை இருதுறைகளிலும் செல்வாக்குமிக்க நபராக மாற்றியது.

மிருனாள் சென்னின் 100 ஆவது பிறந்த நாளைக் கொண்டாடும் இந்த நேரத்தில் மிருணாள் சென்னின் திரைப்படங்கள் இந்திய சினிமாவிலும் ஒட்டுமொத்த திரைப்படத் தயாரிப்பு உலகிலும் அழிக்கமுடியாத முத்திரையை விட்டுச் சென்றிருக்கிறது என்பதை நாம் ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும். அவரது நூற்றாண்டு அவரது திரைப்படங்களைப் பார்க்கவும், அந்த மனிதரையும் அவரது பாரம்பரியத்தையும் மீண்டும் தொடரும் ஒரு சந்தர்ப்பமாகும்.

# வைகறை

இலக்கிய மாத இதழ்
செப்டம்பர் 2023 ■ இதழ்: 5
விலை ரூ. 50



## கத்தார்

மக்கள்திரளின்
மாபெரும் கலைஞன்

---

நாங்குனேரி நிகழ்வு

## மாணவர்கள் சமூக உதிரிகளாகும் பேராபத்து



இலக்கிய மாத இதழ்
(தனிச்சுற்றுக்கு மட்டும்)

விலை: ரூ.50
ஆண்டுச் சந்தா: ரூ.500

இதழ் 5
செப்டம்பர் 2023
திருவள்ளுவராண்டு 2054
ஆவணி-புரட்டாசி

*ஆசிரியர்*
க. சந்திரசேகரன்

*ஆசிரியர்குழு*
பேராசிரியர் க. பஞ்சாங்கம்
ஓவியர் டிராட்ஸ்கி மருது
‘விடியல்’ வேணுகோபால்
அமரந்த்தா

*அட்டைப்பக்கங்களும், பின்னட்டை ஒளிஓவியமும்*
டிராட்ஸ்கி மருது

*ஒருங்கிணைப்பாளர்கள்*
அறிவன்
பா. செல்வபாண்டியன்

*வெளியீடு*
**வையம்**
1/34, பஜனை கோயில் தெரு விரிவு,
மடிப்பாக்கம், சென்னை-600 091
செல்பேசி: 97151 46652
மின்னஞ்சல்: vaiyamtamil@gmail.com

## உள்ளடக்கம்